ஸ்ரீ கணேசசரஸ்வதீ ஸத்குருப்யோ நம:

॥ शिवज्ञानबोधः ॥



# சிவஞானபோதம்



ஸ்ரீமத் சிவாக்ர யோகிகளருளிச்செய்த

இலகு டீகைக்கு மொழிபெயர்ப்பு.



தஞ்சை

ஸ்ரீ-ல-ஸ்ரீ

பிரம்மாநந்தஸ்வாமிகள் அவர்களால்

மொழி பெயர்க்கப்பட்டு

தஞ்சை K. H. ஸ்கூல் சமஸ்கிருதபண்டிதர்

பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளவர்களால்

பார்வையிடப்பட்டு

தஞ்சை

ஸ்ரீசங்கரவிலாச சாரதாமந்திர பிரஸில்,

பதிப்பிக்கப்பட்டது.



(கலி 5029 விபவ-ஹூ)

ரூ. 51] 1928. [அணா 2.

## முகவுரை. 



இச்சிவஞானபோதம் முன்எழுதியுள்ள சிவஞான போதத்தைச் சுருக்கமாய் சைவபரிபாலன ஸ்ரீமத் சிவாக்ர யோகிகள் சமஸ்கிருதத்தில் அருளிச்செய்த இலகுடீகைக்கிசைய மந்த மதியினரும் எளிதில் அறியுமாறு தஞ்சை ஸ்ரீ சங்கரவிலாச சாரதா மந்திர ஸ்தாபகரும், ஸ்ரீ விசார சாகரம், ஸ்ரீ பஞ்சதசப் பிரகரணம், ஸ்ரீ விருத்திப் பிரபாகரம் முதலிய அரிய பெரும் வேதாந்தக் கிரந்தங்களை தமிழில் மொழி பெயர்த்து வெளிப்படுத்திய எமது ஸ்ரீ சத்குரு மூர்த்தியுமாகிய தஞ்சை ஸ்ரீ பிரஹ்ம நிஷ்டபண்டித வி. குப்புஸ்வாமி ராஜு என்னும் பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ பிரம்மாநந்தஸ்வாமிகளால் மொழிபெயர்க்கப்பட்டது.

கு. பா.





ॐ

ஸ்ரீ கணேசசாரதா ஸத்குருப்யோ நம:

# ॥ शिवज्ञानबोधः ॥

# சிவஞானபோதம்.

இலகு டீகை மொழிபெயர்ப்புடன்.

स्त्रीपुंनपुंसकादित्वाज्जगतः कार्यदर्शनात् ।
अस्ति कर्ता स हृत्वैतत्सृजत्यस्मात्प्रभुर्हरः ॥ १ ॥

जगतः कर्तास्ति कार्यदर्शनात् स्त्रीपुंनपुंसकादित्वात् स एतत् हृत्वा पुनः सृजति अस्मात् हरः प्रभुः ॥

இதன்பொருள், காரியத்தன்மை காணப்படுதலால் பிருதிவியாதியான ஜகத்திற்குக் கர்த்தா (செய்பவன்)

உளன்: ஜகத்திற்குக் காரியத்தன்மை எதனாலெனி "स्त्रीपुंनपुंसकादित्वात् = பெண்ணாணலியாதித்தன்மையால்" என்பதனால் கூறுகின்றது. இங்கு பெண் ஆண் அலி என்னும் சொற்களால் அவ்வத்தேகங்கள் சொல்லப்படுகின்றன. ஆதியெனுஞ் சொல்லால் இந்திரியங்கள் கொள்ளப்படும்; அவ்வாதித்தன்மையால் அவற்றின் பிரகாரத்தன்மையால். அதாவது அது போல சாவயவத்தன்மையால் என்பது பொருள். என்ன செய்கின்றான் என்னுமிடத்து "सः = அவன்" என்பதனால் கூறுகின்றது. அக்கர்த்தா ஜகத்தாகிய இதனைச்சங்கரித்து, மறுபடியும் சிருஷ்டிக்கின்றான். இதனால் சங்கார கர்த்தாவிற்கே ஸ்வாமித்வம் (உடையான்றன்மை) என்று "अस्मात् = இதனால்" என்பதனாற் கூறுகின்றது:- கூறிய யுக்தியாகிய இதனால் ஹரன் அதாவது தேகேந்திரியாதிகளின்றியவனான சர்வோபசங்கார சக்திமானே பிரபு (ஈசுவரன்).

இங்கு உளன் என்பதனால் ஏகத்துவம் சொல்லக் கருதியதாம். அதனாலும் சமஸ்தோபசங்கார சக்தியுடையவனாகவே சித்திக்க, அவனுக்குச் சிருஷ்டியாதிகளைச் செய்யுந்தன்மை உசிதமெனக். முதல்

சிருஷ்டியில் சிவனே கர்த்தா; அவனநுக்கிரகத்தால் அநந்தேசுவர ஹிரண்யகர்பாதியருக்கு அவாந்தர (இடைப்பட்ட) கர்த்திருத்துவமாமென்று தத்துவ பேதத்தால் விரோதமின்மை காணத்தக்கதாம். (௧)

**अन्यः सन्व्याप्तितोऽनन्यः कर्ता कर्मानुसारतः ।**
**करोति संसृतिं पुंसामाज्ञया समवेतया ॥ २ ॥**

அவன் எவ்வாறு சிருஷ்டிக்கின்றான் என்னுமிடத்து "**अन्यः सन्** = அந்நியனாய் இருந்து கொண்டு" என்பதனாற் கூறுகின்றது:—

அக்கர்த்தர் பசுக்களுக்கு தனுகரணபுவனாதி சம்சாரத்தினைச் செய் (படைக்)கின்றான். எக்காரணத்தினால் படைக்கின்றான் என்னுமிடத்து "**आज्ञया** = ஆணையால்" என்பதனாற் கூறுகின்றது :—ஆணையால் அதாவது விதிநிஷேதங்களில் பிரவிருத்திக்கச் செய்வதான ஞானக்கிரியா வடிவ சக்தியினால். அக்கிரியை ஈசுவரனைவிட வேறுபட்டதோவெனின் அன்றென்று "**समवेतया** = சமவேதமானதால்" என்று கூறுகின்றது:—சமவேதமானதால் அதாவது

சமவாயவிருத்தியின விருப்பதான அபின்னையான (ஆணையினால்) என்பது பொருள்.

இவன் தனது இச்சையினால் சம்சாரத்தினைச் செய்கின்றானெனின், அப்போது ஒருவனுக்குச் சுகத்தையும் ஒருவனுக்குத் துக்கத்தையும் செய்கின்றான் என்பதனால் விஷமத்தன்மையும் இரக்கமின்மையு முண்டாமென்னுமிடத்து "कर्मानुसारत: = கர்மானுசாரமாக" என்று கூறுகின்றது:— தர்மா தர்மவடிவ கர்மத்தின் அநுசாரமாகச் செய்கின்றான். கேவலம் தனதிச்சைமாத்திரத்தாற் செய்கிறதில்லை யென்பது பொருள். இனி அவன் பிறர் சொல்லும்விதமாக ஜீவாபின்னனாகவே செய்கின்றான் என "अन्य: सन् = அந்நியனாயிருந்து கொண்டு" என்பதனால் அன்றென்று கூறுகின்றது:— அநாதிநிர்மலத்தன்மையினாலும் அநாதிமல முடைமையினாலும் பேதம் கவனிக்கத்தக்கதாம். முத்தியிலும் பின்னனோ? என "व्याप्तितोऽनन्य: = வியாப்தியால் அநந்நியனாய்" என்பதனால் அல்லனெனக் கூறுகின்றது:— தீக்ஷையினால் அல்லது திடசமான ஞானத்தினால் பாசமூன்றும் நீங்கியபோது தன்

னின் வேறுகாத சாக்ஷாத்காரவடிவினதாகிய வியாப்தியினுல் அநந்நியனுய் அதாவது அபின்னனுய் (வேறுபடாதவனுய்) சம்சாரத்தைச் செய்கின்றுன். (உ)

नेतितो ममतोद्रेकादक्षोपरतिबोधतः ।
स्वापे निर्भोगतो बोधे बोद्धृत्वादस्त्यणुस्तनौ ॥ ३ ॥

அப்படியானுல் புருஷர்களின் சம்சாரத்தினைச் செய்கின்றுன் என்று சொல்லப்பட்டது. அப்புருஷசித்தியில் பிரமாணம் யாது என " नेतित: = இவ்வாறு அன்று எனலால்" என்பதனுற் கூறுகின்றது:- தேகத்தில் அணு அதாவது ஆணவமலத்தாலாக்கிரமிக்கப்பட்ட ஆத்மா உளன் அப்படியானுல் ஆத்மாவே இலன்; இருப்புத்தன்மையால் கருதப்பட்டது எதுவோ அது சுக்தியில் வெள்ளி என்னும் முறையினுலாம் என்னுமிடத்து " नेतित:= இவ்வாறு அன்று எனலால்" என்பதனுற் கூறுகின்றது:- இவ்வாறு அன்று என்னும் பிரதீதியினுல் அதாவது பிரத்தியய(உணர்ச்சி) வலியினுனே அணு உளன் என்பது பொருள். அவ்வாறில்லையாயின் அபாவப்பிரத்தியயம் (இன்மையுணர்ச்சி) பிரதியோகி யின்றியதேயாம்

[* எதன் அபாவம் உணரப்படுகின்றதோ அது அவ்வபாவத்தின் பிரதியோகியாம். கடாபாவத்திற்குக் கடம் பிரதியோகியாவது போல]. அப்படியானால் இவ்வாத்மாவாகிய அவன் தேகத்தின் வேறுபடாதவனு யிருக்குக என்னுமிடத்து "ममतोद्रेकात् = மமதையின் ஆதிக்கியமிருத்தலின்" என்பதனாற் கூறுகின்றது :— எனது இது (உடல்) என்னும் உணர்ச்சியாகிய மமதை அதிகமாயிருத்தலின் என்பது பொருள். ஸ்தூலன் யான் என்பது முதலிய பிரதீதியுளதாயினும் அது (உணர்ச்சி) ஆன்மதேகங்களிரண்டன் அபேதாத்தியாச நிமித்தத்தினதாம். அவ்வாறு எந்த யான் பாலியத்தில் பிதாவை யநுபவித்தேனோ, அந்த யானே முதுமையில் போன்மாரை யநுபவிக்கின்றேன் என்று தேகத்தின் அவஸ்தாபேதங்களிலும் பாதிக்கப்படாத அர்த்தமுடைய ஆத்மாவின் † பிரத்தியபிஞ்ஞான மிருத்தலின் தேகத்தின் வேறுபட்டவனை ஆத்மா உளன் என்பது பொருள். அப்படியானால், தேகத்தில்

---

*இது டீகையன்று. விளக்குதற்பொருட்டு எழுதியதாம்.

† முன்நினைவோடு பிரத்தியக்ஷமாயறிதல் பிரத்தியபிஞ்ஞானம்.

ஆத்மா இருக்கவேண்டாம் இந்திரியங்களுளவாகுக என்னுமிடத்து "अक्षोपरतिबोधत: = இந்திரியங் களினொடுக்க மறிதலின்" என்பதனுல் கூறுகின் றது :—இந்திரியங்களின் ஒடுக்கமாகிய சொப்பனத் தில் அறியுந்தன்மை யிருத்தலால், இந்திரியங்கள் ஆத்மாவாகவேண்டாம் புத்தியே அவ்வாறு (ஆத்மா) ஆகுக என்னுமிடத்து "स्वापे निर्भोगत: = உறக் கத்தில் போகமின்மையால்" என்பதனுற் கூறுகின் றது:— சுழுத்திகாலத்தில் இதனுல் புசிக்கப்படு கின்றதென்பதனுல் போகமெனப்படும் புத்தியானது இல்லாதிருத்தலின். அப்படியானுல் உறக்கத்தில் நசித்தவனுகுக, மறுபடியும் உற்பத்தியுடையவன் ஆத்மா ஆகுக வெனின் அவ்வாறன்றென்று "बोधे बोद्धृत्वात् = விழிப்பில் (நினைவு வடிவ) அறியுந் தன்மையிருத்தலால்" என்பதனுற் கூறுகின்றது:— ஜாக்கிரதவஸ்தையில் சுகமாய்த் தூங்கினேன் என் னும் ஸ்மிருதி நிகழ்தலின் சூநியம், தேகம் இந்திரி யம் முதலியவற்றின் வேறுபட்டவனுன ஆத்மா உளன் அதாவது வஸ்துவினுலும் தேசத்தினுலும் காலத்தினுலும் சத்தியம் அணுவாகிய ஆத்மா உளன் (அஸ்தி) என்னும் பதத்தினுற் சொல்லப்படுகின்

னான். அந்தக்கரணங்கட்காம் ஜாக்ராதி (விழிப்பு முதலிய) அவஸ்தைகள். (௩)

आत्मान्तःकरणादन्योऽप्यन्वितो मन्त्रिभूपवत् ।
अवस्थापञ्चकस्थोऽतो मलरुद्धस्वदृक्क्रियः ॥ ४ ॥

அப்படியானால், அநுசூதத்தன்மையால் ஆத்மத் தன்மை வேண்டாம்; அணுவுக்கு அவற்றின் அநுசூதத்தன்மையில் பிரமாணம் யாதென "आत्मा = ஆத்மா" என்பதனாற் கூறுகின்றது:— முற்கூறிய படி ஆத்மாவாகிய அணு புத்தியாதியந்தக்கரணத் தினும் அந்நியனாயினும், மந்திரியோடு அரசன் போல அந்தக்கரணத்தோடு கலந்தவனாய் (அவஸ்தை ஐந்தினு மிருப்பவனாகின்றான்). அப்படியானால் நித் திய ஞானக்கிரியாவடிவினனான ஆத்மாவிற்கு மாயை யினின்று வெளிப்பட்ட அந்தக்கரணத்தோடு அநு சூதமாகுந்தன்மையால் வியாபாரம் எவ்வாற்றலா மென "**मलरुद्धस्वदृक्क्रियः** = மலத்தினால் தகைக் கப்பட்ட தனது ஞானக் கிரியைகளை யுடைய வன்" என்பதனாற் கூறுகின்றது:— மலமாகிய ஆணவத்தினால் நிரோதிக்கப்பட்ட ஞானக்கிரியா

சக்திகளையுடையவனு யிருக்கின்றான். அவ்வாறு அநாதிமலசம்பந்தத்தால் ஆத்மா அந்தக்கரணத்தோடு அநுசூதமாயிருக்குந்தன்மையால் வியாபாரமாம் என்பது கருத்து. இதனுனே அவஸ்தை ஐந்தில் இருப்பவனுகின்றான், அதாவது ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அவஸ்தைகள் ஐந்திலும் அநுசூதன் (தொடர்ந்திருப்பவன்) ஆகின்றான். அவ்வநுசூதத்துவமும், எந்த நான் முந்திய தினத்தில் தனமின்றியவனுயிருந்தேனு அந்த நானே இன்று தனத்தோடு கூடியவனுனேன் என்னும் பாதிக்கப்படாத ஏகாத்மத் தன்மைப் பிரத்தியபிஞ்ஞானத்தால் என்று அநுசந்திக்கத்தக்கதாம். (௩)

विदन्त्यक्षाणि पुंसाऽर्थान्न स्वयं सोऽपि शंभुना ।
तद्विकारी शिवश्चेन्न कान्तोऽयोवत्स तं नयेत् ॥ ९ ॥

அப்படியானல் இரண்டாவது சூத்திரத்தில் சிவன் கர்மாநுசாரமாகப் புருஷர்களின் சம்சாரத்தினைச் செய்கிறான் என்றுசொல்லப்பட்டது. அது இயல்பாகவே ஆத்மாக்களுக்கு உண்டாகுக. ஈசுவரா

தீனத்தன்மையால் ஏன் என்று ஆசங்கித்து பரம்பரையாகப்பசுக்களுக்கு ஈசுவர பாதந்திரத்தன்மையை "विदन्ति = அறிகின்றன" என்பதனுற் கூறுகின்றது:— மனது சக்ஷுா முதலிய இந்திரியங்கள் புருஷனால் அதாவது பிரேரகனுன ஆத்மாவினுல் அநுகூதமானவைகளாய் விஷயங்களான அர்த்தங்களை அறிகின்றன; தாமாக அறிகிறதில்லை; அவைகட்கு அசேதனத்வமிருத்தலின் என்பது கருத்து. புருஷனான அவனும் பிரேரகனுன சம்புவால் அநுகூதனுகவே விஷயங்களை அறிகிருன்; தானுக அறிகிறதில்லை; மலத்தினுல் தகைபட்ட தனது ஞானக்கிரியா சக்தியுடைமையால் என்பது கருத்து. அப்படியானல், கடாதிகளின் கர்த்தாவுக்குப்போல அச்சம்சாரகர்த்தாவான அவனுக்கும் விகாரித்துவமுண்டாகுமே என்று "तद्विकारी = அதனுல் விகாரியாவன்" என்பதனுற் சங்கிக்கின்றது:— அப்படியானுல் அவனும் விகாரியாவனே யெனின், அச்சங்கையினை "न = ஆகான்" என்பதனுல் பரிகரிக்கின்றது:— சிவனுக்கு ஜீவனது சம்சாரத்தினைச் செய்யுந் தன்மையுளதாயினும் அவிகாரித்துவமுளது என்பதில் திருஷ்டாந்தத்தினை "कान्तोऽयोवत् =

காந்தம் இரும்பினைப்போல" என்பதனாற் கூறுகின்றது:— அயக்காந்தம் இரும்பினை அசைப்பதுபோல அச்சிவன் அப்பசுவனைப் பிரேரிக்கின்றான். (ரு)

अदृश्यं चेदसद्भावो दृश्यं चेज्जडिमा भवेत् ।
शंभोस्तद्व्यतिरेकेण ज्ञेयं रूपं विदुर्बुधाः ॥ ६ ॥

முன் சிவனதிருப்பில் பிரமாணமும் தடஸ்த லக்ஷணமும் முதலாவது இரண்டாவது சூத்திரங்களால் சொல்லப்பட்டுள. அதன் பிரசங்கத்தினாலும் பசுவின்சொரூபமும் அதன்பிரமாணமும் மூன்றாவது நான்காவது சூத்திரங்களால் சொல்லப்பட்டுள. ஐந்தாவதால் பசுக்களின் ஸ்வதந்திரத்தன்மையின்மையும் பதியின் ஸ்வதந்திரத்தன்மையும் சொல்லப்பட்டுள. இப்போது அப்பதியின் ஸ்வரூபலக்ஷணத்தினை "अदृश्यं चेत् = அதிருசிய மாயின்" என்பது முதலியவற்றால் கூறுகின்றது:—

(அங்கு) சம்புவின் ரூபம் இந்திரியசம்பந்தப் பிரமாண விஷயமா அன்றா? என்னும் விஷயத்தில் இரண்டாவது பக்ஷத்தினை "अदृश्यं चेत् = அதிருசியமாயின்" என்பதனால் விலக்குகின்றது:- அதிருசியம் அதாவது எல்லோருக்கும் இந்திரியசம்பந்தப் பிர

மாண விஷயமாகாதது எனின், முயற்கொம்புபோல் அசத்துத்தன்மை சம்பவிக்கும். முதற்பக்ஷத்தினை "दृश्यं चेत् = திருசியமாயின்" என்பதனால் விலக்குகின்றது. திருசியம் அதாவது இந்திரியப்பிரமாவிஷயம் எனின், ஜடத்தன்மையுண்டாம், எது இந்திரியப்பிரமாவிஷயமோ அது ஜடமாம், கடம்போல என்னும் வியாப்தியால். அந்தத் திருசியாதிருசிய மிரண்டினும் வேறாக ஞேயமாம், அதாவது அநந்நியமான அநுபவமொன்றினாலேயே அறியத்தக்கதாம். அதாவது இரண்டனபேக்ஷையின்றிய பிரத்தியக்ஷத்தாலறியத்தக்கதாம் சம்புவின் ரூபம் என்று அறிஞர் அதாவது தீக்ஷாதிகளால் பாசமூன்று மொழிந்தமையால் மிக மேலிட்ட ஞானசக்திகளையுடைய புருஷர்கள் அறிகின்றனர். அது, "இந்திரியங்களோடு கூடாதது என்பது எப்போதும் பந்தநீங்கியதான சிற்சத்தியோடு அநந்த யோகமுடையதாய் யோகமின்றிய இயல்பினது என்று கருதப்பட்டதாம்" என்று கூறப்பட்டுளது. அதுவும் ஆதியந்தமில்லாதது, மலமின்றியது, பரிபூர்ணம், ஏகம், சூக்ஷ்மம், பராபரம், அநாமயம், அப்பிரமேயம், பாவமொன்றினாலறியப்படுவது, அஜடம் சிவதத்துவம் எனக் கூறுவர் என்று சொல்லப்பட்டுளது. ()

नाचित्चित्संनिधौ किं तु न वित्तस्ते उभे मिथः ।
प्रपञ्चशिवयोर्वेत्ता यः स आत्मा तयोः पृथक् ॥ ७ ॥

அப்படியானால் சிவன் சரீரந்தோறும் தனது அவித்தையினால் பின்னனைச் சஞ்சரிக்குக. அவனின் வேறான ஆத்மாவைக் கற்பித்தலால் என்னையென "नाचित् = அசித்து விளங்காது" என்றல் முதலியவற்றாற் கூறுகின்றது:-சித்தல்லாத ஜடமான பிரபஞ்சம் நிர்மலசித்துவடிவ சிவத்தின் சந்நிதியில் விளங்காது; அவ்விரண்டற்கும் ஒளியிருள்கட்குப் போல ஒன்றற்கொன்று விரோதமிருத்தலின் என்பது கருத்து. இவ்வாறுளதாயின் அதனால் என்னையென "किं तु = ஆனால்" என்பதனாற் கூறுகின்றது:—ஆனால் சித்தும் அசித்துமான அவ்விரண்டும் ஒன்றனை யொன்று அறியாது. பிரமமின்றியவனைப் பரிபூரண சித்ரூபனான சிவன் அசத்தியமான பிரபஞ்சத்தினை சத்தியரூபத்தன்மையாக அறியான். அசித்தாகிய ஜடப்பிரபஞ்சமும் சிவனை அறியாது. அதற்கு ஜடத்துவமிருத்தலின்; போகத்திற்குச் சேதன தர்மத்துவமிருத்தலின். ஆதலால் பிரபஞ்சம் சிவமென்னும் இரண்டனையும் அறிபவன் எவனோ,

அவன் அவ்விரண்டுடன் வேறான ஆத்மாவா (ஜீவனா) வன். இங்கு பிரபஞ்சாநுபவம் மலாவஸ்தையிலும் சிவாநுபவம் மலநீக்கத்திலும் காணத்தக்கதாம். அப்படியானால் ஜீவனும் சித்ரூபன். அவன் சந்நிதியில் அவ்வசித்தின் விளக்கம் எவ்வாறாம்? உண்மையே. அநாதியாணவமாகிய உபாதியோடு அசித்திற்கு அல்லது ஆத்மாவின் அசித்துத்தன்மைக்கு உடனிருக்குந்தன்மையிருத்தலின் பாரஸ்பரவிரோதமில்லை. இத்தன்மை அப்பிரபஞ்சம் சிவமிரண்டுடன் வேறான ஆத்மா காணத்தக்கவனாவன். (எ)

स्थित्वा सहेन्द्रियव्याधैस्त्वां न वेत्सीति बोधितः ।
मुक्त्वैतान्गुरुणाऽनन्यो धन्यः प्राप्नोति तत्पदम् ॥ ८ ॥

இப்போது குருவின் அநுக்கிரகத்தினால் பாசத்தினின்றும் முக்தியாமென்று "स्थित्वा = இருந்து" என்றல் முதலியவற்றால் கூறுகின்றது:—தன்னியன் அதாவது முமுக்ஷுத்வா திரூபதனமுடைய புருஷன் இந்திரியங்களாகிய வேடர்களோடு (துக்கத்தினைத் தருந்தன்மையால் வேடத்தன்மையாக நிரூபித்தலாம், ஆராயுமுயற்சித்தன்மையாலுமாம்) அவைகளோடு கூட இருந்து குருவடிவ சிவனால் நீ சர்வஞ்ஞ

சர்வகர்த்திரு சச்சிதாநந்த சிவனின் அநந்யரூப மான உனது ஸ்வரூபத்தினை அறியாய் என்று போ திக்கப்பட்டவனாய் இவ்விந்திரிய வேடர்களைவிட்டு, அதாவது இங்கு இந்திரியசப்தத்தாற் சொல்லப்படும் பாஹ்யாந்தரிந்திரியவடிவ இருபத்துநான்கு தத்துவங் களும் அவற்றின் பிரவிருத்திசமயத்தில் உடனிருப் பனவாகிய அவற்றின் பிரேரகமான சத்தாதி பன்னி ரண்டு தத்துவங்களுங்கூடிய முப்பத்தாறு தத்துவங் களையும் விட்டு பிரத்தியபிஞ்ஞையினலறியப்பட்ட அநந்ய ஸ்வரூபனாய்த் தத்பதலக்ஷியமான சிவஸ்வ ரூபத்தினை அடைகின்றான், அதாவது அடையப்பட் டதுபோல் மதிக்கின்றான். எப்படி கழுத்திலுள்ள ஆபரணத்தினை ஒருவன் மறந்து, பின் அந்நியனால் (கழுத்திலிருப்பதாக) போதிக்கப்பட்டவனாய் அத னை யறிந்து, அப்போது முன்இல்லாதது கிடைத் தது போல மதிக்கின்றானோ, அதுபோல மதிக்கின் றான் என்பது பொருள். இங்கு இக்கதை அநுசந் திக்கத்தக்கதாம்:— முன்னொருகால் ஓர் இராஜசிசு எதிரிகளின் பயத்தால் காட்டிற் பிரவேசிப்பிக்கப் பட்டு அங்கு வேடர்களான பிறரால் செவ்வை யாய் வளர்க்கப்பட்டவனாய் தன்னை வேடனாகவே

மதித்திருந்தான். பின்பு வந்த பிதாவினால் நீ வேட னல்லை, நீ இராஜகுமாரன் என்று போதிக்கப்பட்ட வனாய்ப் பின்னர் இராஜபதத்தினையடைந்தான் என்ப தாம். (அ)

चिद्दृशात्मनि दृष्टेशं त्यक्त्वा वृत्तिमरीचिकाम् ।
लब्ध्वा शिवपदच्छायां ध्यायेत्पञ्चाक्षरीं सुधीः ॥ ९ ॥

குருவினால் தத்பதத்தினை அடைகின்றான் என்று முன் சொல்லப்பட்டது. அங்கு குருதீக்ஷைமாத் திரமே முக்திசாதனமாகாது. மற்றோ, சிரவணாதி வாயிலாக மலம் நீங்க, அதனால் சாக்ஷாத்காரமுண் டாகத் தத்பதப் பிராப்தியாமென்று "चिद्दृशा = ஞானக்கண்ணால்" என்றல் முதலியவற்றாற் கூறு கின்றது:-நற்புத்தியுடையோன் அதாவது சிவனொரு வனையே விஷயஞ்செய்தற்றன்மையாகிய சோபன மான புத்தியையுடையவன் அதாவது குருவினாலுப தேசிக்கப்பட்ட ஆத்ம சிவாபேத பிரதிபாதக சிர வண மனனங்களினால் சம்பாதிக்கப்பட்ட புத்தி யுடையவன் பிரபஞ்சத்தினை விஷயஞ்செய்யும் ஞான மாகிய விருத்தி வடிவ கானல்ஜலத்தினை அதாவது (அதற்கு அத்யாத்மாதி தாபத்திரயத்தினை நீக்கும்

சாமர்த்தியமின்மையால் அத்தன்மையாக நிரூபித்த லாம்.) விட்டு, (விடுதலும் தீக்ஷைமுதலியவற்றால் மலம் நீங்கியபோது காணத்தக்கதாம்.) அதன்பின் என்னசெய்கின்றான் என "चिद्दृशा = ஞானக்கண்ணால்" என்பதனாற் கூறுகின்றது:— பரமாத்மசித் சக்தியாரூடமான திருஷ்டியினால் சிவனாகிய ஈசனை ஆத்மாவில் கண்டு அதாவது தன்னின் அபின்னத் தன்மையாக அநுபவித்து (இதனால் சிவன் எவனோ அவன் யானென்னும் நிதித்தியாசனம் சொல்லப்பட்டது.) பின் சிவபதச்சாயையினையடைந்து, (தன்னின் அந்நியமாகாத்தன்மையால் அடையப்படுகின்றது என்பதனால் பதமாம்; சிவனேபதம் சிவபதம்; அதன்சாயையாவது அநுக்கிரகிப்பதான சக்தி. அதனைச்சாயாத்தன்மையாகக்கூறுதல் முற்கூறிய தாபத்திரயத்தினால் தபிக்கப்பட்டவர்களின் களைப்பினை நீக்குந்தன்மையாகியதாம் என்று அறிதல்வேண்டும். அத்தன்மைய சாயையினையடைந்து) அதாவது ஸ்வாத்மாவில் ஸ்வாபின்னத்தன்மையாகக் கிடப்பதனை அடைந்து பஞ்சாக்ஷரியினைத் தியானிக்கக்கடவன். இங்கு 'பிரவேசி பிண்டத்தினை' யென்னு

மிடத்தில் 'இலாபத்தினைப்புசிக்குக' என்பதுபோல 'சிவத்தினை, ஜபிக்குக' என்று இரண்டு பதங்களை வருவிக்கவேண்டும். வருவிக்கவே; இது அர்த்தமாம்:— பஞ்சாக்ஷரியினை ஜபிக்குக, சிவத்தினைத் தியானிக்குக என்பது. ஐந்து எழுத்துக்களின் தொகுப்பு பஞ்சாக்ஷரீயாம். அவை நகார முதலியன. அல்லது பஞ்சாக்ஷரீசப்தத்தால் அவற்றின் வாச்சியமான அர்த்தங்கள் இலக்ஷயிக்கப் படுகின்றன. அவை சிவன் சக்தி ஜீவன் மலத்திரயம் அவற்றை நீக்குவதான சக்தி என்பனவாம், அது,

"मध्ये शिवस्ततः शक्तिस्तत आत्मेति हि स्मृतः ।
तत्पूर्वं बन्धकः प्रोक्तस्तत्पूर्वं तन्निवारकम् ॥" என்பதனால் சொல்லப்பட்டுளது. இதன்பொருள் இதுவாம்:— "ஐந்தெழுத்துக்களின் (நம: சிவாய என்பதன்) மத்தியிலிருப்பதான சிகாரத்தில் சிவன், அதற்குப் பிந்திய நான்காவதான வகாரத்தில் சிவசமவேதையான பராசக்தி, அதற்குப்பிந்திய ஐந்தாவதான யகாரத்தில் ஆத்மாவாகிய அணு, அச்சிகாரத்திற்கு முந்தியதான விசர்க்கத்தோடுகூடிய மகாரத்தில் பந்திப்பதான மலம், அதற்கு முந்தியதான நகாரத்தின்

அம்மலத்தினைப் பரிபாகபூர்வகமாக நிவர்த்திப்பது அதாவது குருகடாக்ஷ தீக்ஷாநுக்கிரகசக்தியாதி, இவை வாச்சியத்தன்மையாகக் கருதப்பட்டனவாம்" என்பது. இவ்வாறாகவே, சிவன் தனது சக்தியால் ஜீவாத்மாவை ஆணவாதிமல மூன்றனின்றும் விலக்கு கின்றான் என்று அநுசந்திக்கவேண்டுமென்பது பலித்தபொருளாம்.

அல்லது பஞ்சாக்ஷரீசப்தத்தால் பிரணவ பஞ்சாக்ஷரீ அல்லது பிராசாதபஞ்சாக்ஷரீ என்னும் சூக்ஷ்மமானது சொல்லப்படும். இங்கு முதல்வர்ணத்தில் அகாரம் உகாரம் மகாரம் பிந்து நாதம் என்பன. இரண்டாவதில் ஹகாரம் உகாரம் மகாரம் பிந்துநாதம் என்பன. அவற்றுள், வைதிகர் முந்தியதான சூக்ஷ்மபஞ்சாக்ஷரியை ஜபிக்குக; சைவர்களோ, பிராசாதபஞ்சாக்ஷரியினை ஜபிக்குக; சிவத்தினைத் தியானிக்குக என்று தக்கவாறு பொருத்திக்கொள்ளவேண்டும். இங்கும் பஞ்சாக்ஷரீசப்தத்தால் அதன்வாச்சியமான தேவதைகளே இலக்ஷியிக்கப்படுகின்றன, சப்தத்திற்குத் தியேயத்துவம் பொருந்தாமையால். அவர்கள் அகார உகார மகார பிந்து நாத மென்பவற்றில் முறையே

யிருப்பவரான பிரஹ்ம விஷ்ணு ருத்ர ஈசுவர சதா சிவர்களாவர். பிராசாத பஞ்சாக்ஷரியிலே கிரமமாகச் சிருஷ்டியாதிகளைச் செய்கின்றனர் என்று தியானித்தல் அறியத்தக்கதாம். கிருத்தியப்பிரவிருத்தியைச் செய்விப்பனவாகிய பஞ்சசக்திகள் என்று அறியவேண்டும். அங்குத் தேவதைகளின் தியானமானது சிவன் பிரஹ்மா முதலிய ஐந்து வடிவமாக ஈசுவரர்களை யதிஷ்டித்துப் பகவானது சக்திகளே பிராணிகளின் சிருஷ்டியாதிகளைச் செய்கின்றன என்று தொடர்ந்து சிந்தித்தல் என்று அறியத்தக்கதாம். இச்சூத்திரத்தால் ஜீவன்முக்தி சொல்லப்பட்டது. (கூ)

शिवेनैक्यं गतः सिद्धस्तदधीनस्ववृत्तिकः ।
मलमायाद्यसंस्पृष्टो भवति स्वानुभूतिमान् ॥ १० ॥

இனி இப்போது கூறிய உபாயம் பொருந்தாத போது பிரதிபத்தியினை "शिवेन = சிவத்தோடு என்பதனுல்" கூறுகின்றது:— அந்தக்கரண வசீகரணமாகிய சித்தியையுடையவன் சிவனேடு அநந்யியத் தன்மையாகிய ஐக்கியத்தினைப் பெற்றவனுய், அத

ளலேயே ஆணவமலம் மாயை ஆதியென்பதனாற் சொல்லப்பட்ட கர்மம் என்பவற்றால் பற்றப்படாத வனாய் அதாவது சுவயமாகவே நீங்கியவனாய், அதனா லேயே அச்சிவன் வசத்ததான தனது விருத்தியினை யுடையவனாய் அதாவது அவ்விருவரின் ஐக்கியத் தால் சிவனது வியாபாரவடிவ தனது வியாபாரமுடை யவனாய், ஸ்வாநுபூதியுடையவன் ஆகின்றான். சுவ அதாவது சிவனோடு ஐக்கியமடைந்த ஆத்மாவாகிய தனது அநுபூதியை அதாவது சிவாநந்தியத்தன்மை யாக அநுபவத்தை உடையவனாகின்றான் என்பது பொருள். (க0)

दृशोर्दर्शयिता चात्मा तस्य दर्शयिता शिवः ।
तस्माच्चस्मिन्परां भक्तिं कुर्यादात्मोपकारके ॥ ११ ॥

இது முடியாதபோது ஹரபக்தியை "दृशो: = கண் களுக்கு" என்பதனாற் காட்டுகின்றது: — ஜீவனாகிய ஆத்மா சக்ஷுக்களுக்கு அறிவிப்பவனாவன். இது மற்றைய இந்திரியங்கட்கும் உபலக்ஷணமாம். அவ் வாத்மாவிற்குச் சிவன் கலாதிவாயிலாக மலத்தினை நீக்கி விஷயத்தைக்காட்டுவனாவன். ஆகலால் ஆத்மா

வாகிய தனக்கு போகமோக்ஷவடிவ உபகாரம் செய் பவனாகிய சிவனிடத்தில் மிகத்திடமான பக்தியினைச் செய்க. பக்தியென்பது பஜனம் அதாவது அந்தர் யாகமாம்: அதுவும் இருதயகமலம் நாபிகுண்டம் புருவநடு என்பவற்றில் யஜித்தல் ஹோமித்தல் ஸமாதி வடிவினதாம். (கக)

मुक्त्यै प्राप्य सतस्तेषां भजेद्वेषं शिवालयम् ।
एवं विद्याच्छिवज्ञानबोधे शैवार्थनिर्णयम् ॥ १२ ॥

இதிலும் சாமர்த்தியமில்லாதவன் பாகிய பக்தியினைச்செய்யவேண்டும் என்று "मुक्त्यै = முக்தியின் பொருட்டு" என்பதனாற் கூறுகின்றது:— முக்தியின் பொருட்டு வைதிகசைவாநுஷ்டானமுள்ள ஞானதேசிகர்களான ஸத்துக்களைக் குருத்தன்மையாற் செவ்வையாயடைந்து, அச்சைவர்களது சம்பந்தியாகிய வேஷத்தினை அதாவது பஸ்மருத்திராக்ஷ முதலிய சின்னத்தினைப் பஜி (உபாசி)க்கவேண்டும். இங்கு வேஷத்தின் பஜனத்தினைக் கூறியது ஜாதி குணக்கிரியைகளை நோக்காமைப்பொருட்டாம். சிவாலயத்தினையும் பஜிக்கவேண்டும், மஞ்சங்கள் கூச்சலிடுகின்றன என்றல் முதலியனபோல் லக்ஷணையினால் சிவாலயசப்தத்தினால் சிவலிங்கம் பிரதிமை

முதலியன சொல்லப்படும். இவ்வாருகவே, ஸத்துக்கள் என்பதனுல் சைவாசாரியர்களேயும், வேஷசப்தத்தினுல் பஸ்மருத்திராக்ஷதாரிகளான மாஹேசுவரர்களேயும், சிவாலய சப்தத்தினுல் சிவலிங்கத்தினேயும் கொள்ளுதலாம். இதனுல் சரியாக்கிரமமும், இதற்கு முந்திய சூத்திரத்தில் கிரியாக்கிரமமும், அதற்கு முந்தியதில் யோகக்கிரமமும், அதற்கு முந்தியதில் ஞானக்கிரமமும் சொல்லப்பட்டதாமென்று அறிய வேண்டும். இவ்வாருகவே, பதி பசு பாசபதார்த்த ஸ்வரூபமும், முக்தியுபாயவடிவ ஞான யோக கிரியா சரியைகளும் பன்னிரண்டு சூத்திரமுடையதான நாலினுற் சொல்லப்பட்டனவாம் என்று "ஏவ் = இவ்வாறு" என்பனுல் அறிவிக்கின்றது. சிவஞான போத சாஸ்திரத்தில் முற்கூறிய சைவார்த்தத்தின் நிர்ணயத்தினே இவ்விதமாக அறியவேண்டும்; வேறு விதத்தாலன்று. இவ்வாறு யாவும் சம்பாதிக்கப் பட்டது. (கஉ)

இவ்வாறு ஸ்ரீமத் அதிவர்ணாசிரமவரிய ஸைவபரிபாலக சிவாக்ரயோகியரியற்றிய இலகுடீகையின் மொழிபெயர்ப்புடன்

சிவஞானபோதம்

முடிந்தது.